4 பக்கம் விலை 0—1—0

JANASAKTHI
Phone 85777

இலங்கையில் 10 சதம்

# ஜனசக்தி

கம்யூனிஸ்ட் கட்சி தின இதழ்
COMMUNIST TAMIL DAILY

## ஏ. கே. கோபாலனுக்கு எதிர்க்கட்சி தலைவர் ஸ்தானம்

புதுடில்லி, ஜூன் 14—

பார்லிமெண்டில் எதிர்க் கட்சி தலைவர் அமரும் ஸ்தானம் இன்று கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர் தோழர் ஏ. கே. கோபாலனுக்கு அளிக்கப்பட்டது. கம்யூனிஸ்ட் கட்சியை பிரதான எதிர்க்கட்சியென சர்க்கார் ஒப்புக்கொள்ளாவிட்டாலும், எதிர்க் கட்சிகள் குரூப்கள் ஒன்றைக்கூட, சர்க்கார் இன்னும் அங்கீகாரம் செய்யவில்லை.

## ராஜஸ்தான் சட்டசபை உபதேர்தலில் கம்யூனிஸ்ட் வெற்றி

ஜோத்பூர், ஜூன் 14—

ராஜஸ்தான் சட்டசபைக்கு ஜோத்பூர் தொகுதியில் உப தேர்தலில் தோழர் எச். கே. வியாசுக்கு 3,128 ஓட்டுகள் கிடைத்தன. டாக்டர் கேட் லகானி (சுயேச்சை) 2,631 ஓட்டுகள் பெற்றுத் தோற்றார். காங்கிரஸ் அபேட்சகர் குமாரி பாடியா 1,947 ஓட்டுகள் பெற்று படு தோல்வியடைந்தார். மொத்தம் 6 பேர்கள் போட்டியிட்டனர்.

மலர் 8 | சென்னை 15—6—'52 ஞாயிறு ★ வெளியூர் 16—6—'52 திங்கள் | இதழ் 180

# ஏழைக்கு புதிய வரி: பணக்காரருக்கு வரி இல்லை

## முதலமைச்சர் ராஜகோபாலாச்சாரி அறிவிப்பு

## கழுதைகள்போல பொதுமக்கள் பொதிசுமக்க வேண்டுமாம்

### ஆச்சாரியாரின் ஏளனமும், இறுமாப்பும்

கடப்பை, ஜூன் 14—

"புது வரிகள் போடப்போகிறேன். பொதுமக்களே தயாராயிருங்கள்" என இன்று முதலமைச்சர் திரு. சி. ராஜகோபாலாச்சாரியார் இறுமாப்புடன் கூறினார். "பணக்காரர்களுக்கு அதிக வரி விதிக்கும்படி கம்யூனிஸ்ட்கள் கூறினர்கள். ஆனால் பணக்காரர்கள் ஏற்கனவே வரிப்பளுவால் அவதிப்படுகிறார்கள். எனவே, ஏழைகள்தான் அதிக வரி கொடுக்கவேண்டும்," என ராஜாஜி மேலும் தன் ஜனவிரோத உள்ளத்தைத் திறந்து காட்டினர்.

விவசாயப் பொருள்களின் விலை வீழ்ச்சியால் சொல்லொணாத் கஷ்டங்களுக்கு விவசாய மக்கள் உள்ளாகியிருக்கின்றனர். வாங்கிய கடன்களைத் திருப்பித் தர முடியாமலும், அடுத்த மகசூல் சாகுபடி செய்யமுடியாமலும் திண்டாடித் தெருவில் நிற்கிறார்கள். லட்சக்கணக்கான கைத்தறி நெசவாளிகளும், அவர்களின் குடும்பங்களும்; வேலையின்றி அலைமோதி நிர்க்கதியாய் நிற்கிறார்கள். கொடிய கஷ்டத்திற்காளாகியுள்ளனர். 50.000 தோல் பதனிடும் தொழிலாளர்கள் வேலையிழந்து தெருவில் நிற்கிறார்கள். மின்சார வெட்டினால், தமிழ்நாட்டில் பல்லாயிரக்கணக்கான மில் தொழிலாளிகள் வாரத்தில் இரண்டு மூன்று நாட்கள்தான் வேலைசெய்து மிகக் குறைந்த கூலிபெற்று வருகிறார்கள். எனவே, தமிழ்நாட்டில் ஏழை, எளிய மக்கள் படும் கஷ்டம் சொல்லத்தரமன்று.

உணவு ரேஷனும் நீக்கப்பட்டது. இதன் விளைவாக உணவு விலைகள் உயர்ந்து வருகின்றன. படி அரிசி சுமார் பனிரெண்டு அணா ரேஷனில் கிடைத்தது. இப்பொழுது இதற்கு ரூ. 1-2-0 கொடுக்கவேண்டும். 50 சத விகிதம் விலை உயர்ந்தது.

இடுப்பொடிய வரி சுமக்கும் ஏழை, எளிய பஞ்சை மக்களை மேலும் கசக்கிப் பிழிய ஆச்சாரியார் தீர்மானித்துவிட்டார். பணக்காரர்களுக்கு வரியில்லை. ஏழைகளுக்கு அதிக வரி!

#### பொதுமக்கள் கழுதைகளாம்

"கழுதைகள் சுமக்கும் அளவுக்குத்தான் பொதி ஏற்றுவேன். கழுதைகள் மேல் பொதி யேற்றினால் ஒழிய அழுக்குத் துணிகளை வெளுக்கமுடியாது" என ஆச்சாரியார் திருவாய் மலர்ந்தார்.

பொதுமக்கள் கழுதைகள் ஆகிவிட்டார்கள். அவர்கள்தான் அரசாங்கத்தின் அதிக செலவுக்கு தண்ட வரி கொடுத்தாக வேண்டுமாம்.

#### பணக்காரருக்குவரி இல்லை

"பணக்காரர்களுக்கு அதிக வரி விதிக்க வேண்டுமென கம்யூனிஸ்ட்கள் கூறுகிறார்கள். ஆனால் நான் பணக்காரர்களுக்கு வரி விதித்தால், அவர்கள் உடனே புகார் கூறுவார்கள். அவர்கள் இப்பொழுதே அதிக வரிதான் செலுத்துகிறார்கள்" என திரு. ராஜகொபாலாச்சாரி கூறினர்.

## இந்திய—அமெரிக்க அணைக்கட்டு ஒப்பந்தம்

### மக்கள் வரிப்பணம் வீண் விரயமாவதற்கு வழி

புதுடில்லி, ஜூன். 14—

இந்திய—அமெரிக்க டெக்னிகல் கூட்டுறவு ஒப்பந்தம் என்ற பேரால், யந்திர சம்பந்தமான உதவி, சாமான்கள், நிபுணர்கள் அமெரிக்காவிலிருந்து இறக்குமதி செய்ய இந்திய சர்க்கார் பல ஒப்பந்தங்கள் செய்துள்ளது. இதன் மூலம் இந்தியாவில் அணைக்கட்டுகள் கட்டவும், நீர்ப்பாசன வசதிக்குரிய கால்வாய்கள் வெட்டவும், மின்சார நிலையங்கள் அமைக்கவும் போடப்பட்டுள்ள திட்டத்தை நிறைவேற்ற இந்த ஒப்பந்தம் செய்யப்பட்டுள்ளது. இன்று கையெழுத்திடப்பட்ட ஒப்பந்தம் 11-வது கடைசி ஒப்பந்தம் என்று தெரிகிறது. நாட்டின் தொழில் வளர்ச்சிக்கோ கன தொழில் வளர்வதற்கோ உரிய திட்டமல்ல இது. இந்தியாவை மேலும் விவசாய நாடாக்கி, காலனிப் பொருளாதார அமைப்பை ஸ்திரப்படுத்துவதற்காக, அமெரிக்காவிலிருந்து நிபுணர்கள், விவசாயக் கருவிகளை இந்தியாவில் கொண்டுவந்து குவித்து, இந்திய முன்னேற்றத்திற்கு உதவாத காகிதத் திட்டங்களை பிரச்சாரம் செய்வதற்கான ஒப்பந்தமாகும் இது.

இந்த ஆண்டு ஜனவரியில் செய்துகொண்ட ஒப்பந்தப்படி, இந்த 11 ஒப்பந்தங்கள் கையெழுத்தானதன் மூலம், இந்திய—அமெரிக்க டெக்னிகல் கூட்டுறவு நிதிக்கு அமெரிக்காவின் பங்கு 5 கோடி டாலர், இந்திய சர்க்காரின் பங்கு 41 கோடி 1 லட்சம் ரூபாயாகும். இன்று கையெழுத்தான ஒப்பந்தப்படி, அணைக்கட்டு கால்வாய், மின்சார நிலையம் போன்றவைகளுக்காக யந்திரங்கள், சாமான்கள் ரூபத்தில் 47,84,000 டாலர் பெறுமதியான அளவுக்கு அமெரிக்கா தருவதாக வாக்களித்துள்ளது.

இந்த திட்டத்திற்கு இந்திய சர்க்கார் தரவேண்டியது 5 லட்சம் ரூபாய். 5 வருட திட்டத்தில் அங்கீகரிக்கப்பட்டுள்ள நீர்ப்பாசன, மின்சார திட்டங்களுக்கு யந்திரங்கள் சப்ளை செய்யப்படும்.

மற்றும் இரண்டு ஒப்பந்தங்களான மலேரியா தடுப்பு, காடு ஆராய்ச்சி, ராஜபுதானா பாலைவனம் விஸ்தரிப்பைத் தடுக்கும் ஆராய்ச்சி சம்பந்தமானவை இந்த வாரத்தின் ஆரம்பத்தில் கையெழுத்தாயின.

மலேரியா தடுப்பு திட்டத்தின்படி அதன் ஸ்தாபனத்தைவிரிவுபடுத்தி, ஆட்களை அதிகப்படுத்தி நிபுணர்கள், டெக்னிகல் உதவியாளர்கள், சாமான்கள் உதவ வேண்டும். இதற்கு கூட்டாக செலவழிக்கவேண்டிய தொகை மதிப்பு 6,48000 டாலரும், 37,350 ரூபாயுமாகும். ரூபாயைக் கொண்டு சிப்பந்திகள் சம்பளம், உள்நாட்டுச் செலவு செய்யவேண்டுமாம். டாலர் அமெரிக்காவிலிருந்து நிபுணர்களும், சாமான்களும் வரவழைப்பதற்குத் தானே!

காடு ஆராய்ச்சி, ராஜபுதானா பாலைவனத் தடுப்புக்கு 1,04,000 டாலரும், 2,08,000 ரூபாயும் செலவினமாக மதிப்பிடப்பட்டுள்ளது.

இப்படி இந்திய மக்களின் வரிப்பணத்தை, டாலர் நாட்டின் நிபுணர்களெனப்படுவோருக்கும் டாலர் நாட்டு முதலாளிகள் லாபத்தைப் பெருக்கும் சாமான்களுக்கும் கொட்டி கொடுப்பதற்குத்தான் இத்தகைய இந்திய-அமெரிக்க ஒப்பந்தம் கையெழுத்திடப்பட்டு வருகின்றது,

## தோழர் 'சி. ஏ. பாலன் உயிரைக் காப்போம்'

### ராயப்பேட்டை பொதுமக்களின் எதிரொலி!

சென்னை, ஜூன் 15—

நேற்று மாலை ராயப்பேட்டை அம்மன் கோவில் முன்பாக மக்கள் பொதுநல மன்றத்தின் சார்பில் ஒரு மாபெரும் பொதுக்கூட்டம் நடந்தது. அதில் தொழிலாள வர்க்கத்தின் தலைவன், கம்யூனிஸ்ட் கட்சித் தோழர் சி. ஏ. பாலன் உயிரைக் காப்பாற்றும்படி ஜனாதிபதியையும், ஆட்சியாளர்களையும் நிர்ப்பந்திப்போம் என்று அங்கு கூடியிருந்த ஜன வெள்ளம் ஏகோபித்துத் தீர்மானித்த குரல் திக்கெட்டும் எதிரொலித்தது.

தோழர் பச்சையப்பன் தலைமையில் தோழர்கள் கே. விஞயகம் (பிரஜா-எம்.எல்.ஏ.), முகவை இராஜமாணிக்கம் (ஜனசக்தி), மோகன் குமாரமங்கலம், மணலி கந்தசாமி (எம். எல். ஏ.) ஆகியோர் தோழர் சி. ஏ. பாலனின் உயிரைக் காப்பாற்ற, ஜனநாயக எண்ணம் படைத்த ஒவ்வொருவரும் ஐக்கிய முன்னணி ஆர்வங்கொண்ட அனைவரும் நேர்மையான மனித உள்ளம் படைத்த சகலரும், தந்திகளும், மகஜர்களும், கடிதங்களும் ஜனாதிபதிக்கும், ஆட்சி பீடத்திலிருப்பவர்களுக்கும் உடனடியாக அனுப்பிவைக்க முன்வரவேண்டுமென்றும் மிக உருக்கமாக வேண்டிக்கொண்டனர்.'

மக்களுக்காக சேவை செய்த சி.ஏ. பாலனை, "நான் ஒரு நிரபராதி, நான் சாவதற்கு அஞ்சவில்லை, ஜனசக்தி திரண்டால், ஐக்கிய முன்னணி ஆர்வம் வளர்ந்தால் என்னை மக்களால் காப்பாற்ற முடியும்" என்று அஞ்சா நெஞ்சத்துடன் மலர்ந்த முகத்தோடுகொலைகொட்டடியில் கோவைச் சிறையிலே 24 மணி நேரமும் அடைபட்டுக் கிடக்கும் இளஞ் சிங்கம் பொன்று கர்ஜித்துக்கொண்டு நிற்கும் பாலனை நாம் காப்போம், மக்களால் நிச்சயம் காப்பாற்றமுடியும், அது மக்களுடைய மனிதப் பண்புக்கேற்ற கடமை, என்று ஆவேசமாகத் தோழர்கள் பேசினர் அரசாங்கம் இதில் சரியாக நடந்துகொள்ளவில்லையானல், மக்கள் மன்னிக்கமாட்டார்கள் எளிதில் என்று ஆட்சியாளர்களுக்கு எச்சரிக்கை விட்டனர். எங்கும் ஒரே உணர்ச்சி அலை வீசிய வண்ணம், "பாலன் வாழ்க!" என்று கோஷித்துக் கொண்டு பொதுமக்கள் கூட்டத்திலிருந்து கலைந்தனர்.

## இறுதி வெற்றியில் ஹோ-சி-மின் நம்பிக்கை

ஹாங்காங், ஜூன் 14—

வியத்மின் மக்கள் குடியரசின் தலைவர் டாக்டர் ஹோ-சி-மின் கடந்த ஏப்ரல் மாதம் நடைபெற்ற வியத்நாம் கம்யூனிஸ்ட் கட்சி மகாநாட்டில் "சர்வதேச நிலைமை வியத்நாம் மக்களுக்கு அனுசரணையாக வுள்ளது" என்று அறிவித்தார்.

அவர் மேலும் கூறியதாவது:

"நமது ஜனநாயக, சமாதான முகாம் பலம்பொருந்தியிருக்கிறது. நமது மக்களும், படையும் சுருசுருப்பாக உள்ளன. நமது கட்சி உறுப்பினர்களும், ஊழியர்களும் உண்மையாய் பணியாற்றுகின்றனர். நமது கட்சியின் பாதை சரியாக வகுக்கப்பட்டுள்ளது. இவ்விதமாக வெற்றிக்கு சாதகமான எல்லா குணங்களும் நம்மிடத்தில் உள்ளன. தன்னம்பிக்கையோடு நாம் வகுத்துள்ள நீண்டகால எதிர்ப்பை உறுதியாக நடத்துவோம்; அதே சமயத்தில் பரந்த தாக்குதலை நடத்தவும், இறுதி வெற்றியைப் பெறவும் பாடுபடுவோம்."

## சட்டசபை மெம்பர்கள் வெளியேறினர்

ஐதராபாத், ஜூன் 14—

ஐதராபாத் சட்ட சபை எதிர் கட்சியைச் சேர்ந்த 62 மெம்பர்கள், சில சுயேச்சை மெம்பர்கள் உள்பட இன்று சட்ட சபையை விட்டு வெளியேறினர். சபையில் உஸ்மானிய யூனிவர்சிடி செனட்டுக்கும், மத்திய ரயில்வே ஆலோசனை போர்டுக்கு பிரதிநிதி தேர்தல் நடந்தபோதுதான், மேற்கூறிய 62 மெம்பர்களும் சபையை விட்டு வெளியேறினர்.

இந்த இரு சபைகளிலும் விகிதாசார பிரதிநிதித்வம் வேண்டும் என்று மக்கள் ஜனநாயக முன்னணி, ஐக்கிய மக்கள் கட்சியின் தலைவர்கள் கோரியதை காங்கிரஸ் கட்சி ஏற்றுக்கொள்ள மறுத்து, சகல ஸ்தாபனங்களும், செனட்டுக்கு 4-ம் ஆலோசனை போர்டுக்கு 2-ம் காங்கிரஸ் அபேட்சகரையே நிறுத்தியதால் தான், எதிர்க்கட்சி மெம்பர்கள் வெளியேற நேர்ந்தது.

## தொழிலாளர் பிரதிநிதி-மந்திரி பேட்டி

புதுடில்லி, ஜூன் 14—

தமிழ்நாடு தொழிற்சங்க காங்கிரஸ் துணைத் தலைவர் திரு. எஸ். கிருஷ்ணமூர்த்தி, கே. அனந்தன் நம்பியார் எம். பி., டி. பி. விட்டல் ராவ் எம். பி. ஆகியோர் தொழிலாளர் மந்திரி திரு. வி. வி. கிரியைச் நேற்று சந்தித்து ஏற்கெனவே 50% மின்சார வெட்டு ஏற்பட்டுள்ளதால் சங்கடப்படும் சுமார் 20,000 மில் தொழிலாளர்களுக்கு நஷ்டஈடு கொடுக்கப்பட வேண்டுமென்று கோரினர். (பூரணமான மின்சார வெட்டு வந்துள்ள செய்தி அவர்களுக்குத் தெரியாது.—ஆ-ர்.)

பின்னர் தொழில் மந்திரி திரு. டி. டி. கிருஷ்ணமாச்சாரியைச் சந்தித்து அவசரமாக புதிய மின்சார உற்பத்தி நிலையங்களை ஏற்படுத்த உதவி செய்ய வேண்டுமென்று கோரி ஒரு விண்ணப்பத்தை சமர்ப்பித்தனர்.

●

மதுரை. ஜூன் 14—

பைக்கார-பாபநாசம்—மேட்டூர் மின்சார சப்ளையை பூரணமாக சகல தொழில்களுக்கும் ஜூன் 17 முதல் கொண்டுவருவது எனப் போடப்பட்ட தீர்மானம் ஜூன் 20 தேதிவரை ஒத்திவைக்கப்பட்டுள்ளது. இவ்வாறு நமக்கு இங்கிருந்து கிடைத்த செய்திகளிலிருந்து தெரிகின்றது.

"அபிப்பிராயம் வெளியிடும் சுதந்திரம் நமது பிறப்புரிமை; அரசியல் சட்டத்தின்மூலம் அது பரிபூரணமாக உத்தரவாதம் செய்யப்பட்டாலொழிய நாம் ஓய்ந்திருக்க மாட்டோம்"

# ஜனசக்தி

ஞாயிற்றுக்கிழமை 15-6-1952

## பார்லிமெண்டில் நேருவின் பேச்சு

இந்திய யூனியன் பார்லிமெண்டில் பட்ஜெட் விவாதத்தின் போது, இந்தியாவின் வெளிநாட்டுக் கொள்கை சம்பந்தமாக ஜூன் 12-ந் தேதியன்று பண்டிட்நேரு நீண்டதோர் பிரசங்கம் செய்திருக்கிறார்.

தன்னுடைய வெளிநாட்டுக் கொள்கையைக் குறை கூறுபவர்களுக்கு அவர் பதில் கூறுகையில் "ஏகாதிபத்யம், ஏகாதிபத்யம் என்று பேசுவதெல்லாம் பத்தாம்பசலி வாதம்; இப்பொழுது பழைய மாதிரி ஏகாதிபத்யம் கிடையாது; ஏகாதிபத்யம் தன் சக்தியை இழந்துவிட்டது; மலேயாவிலும், தென் ஆப்ரிக்காவிலும் இன்னும் சில இடங்களிலும் பிரிட்டிஷ் ஏகாதிபத்யம் இருப்பது வாஸ்தவம்தான்; ஆனால் அது கம்யூனிஸ்டுகள் கூறும் காரணத்திற்காக அல்ல; வேறு காரணங்களுக்காக இருக்கிறது" என்று கூறி, பூனை கண்ணை மூடிக்கொண்டு உலகமே இருண்டுவிட்டது என்று நினைப்பதுபோல், ஏகாதிபத்யமே உலகத்திலில்லை என்று மற்றவர்களை நம்பச் சொல்கிறார்.

பிரிட்டிஷ் மூலதனம் நம் நாட்டைச் சுரண்டிக் கொள்ளையடிப்பதோ, நம் ராணுவப் படைகளெல்லாம் பிரிட்டிஷ் தளபதிகளின் ஆதிக்கத்திலிருப்பதோ, ஏகாதிபத்தியத்தின் குணதிசயங்களல்ல நேருவின் அகராதிப்படி! பிரிட்டிஷ் காமன்வெல்த்திலே அங்கத்தினராயிருப்பதுபற்றி வானளாவப் புகழ்கிறார். அது ஒரு பரம்பரையாம்! கொடிய அடக்குமுறைகளைக் கட்டவிழ்த்துவிட்டு, மாப்பிள்ளை விவசாயிகளைப் படுகொலை செய்தது, ஜாலியன்வாலாபாக்கில் நம்மக்கள் படுகொலை செய்யப்பட்டதும், இன்னும் நாடு பூராவிலும் விடுதலைப் போராட்டத்திலே திருப்பூர் குமரன் போன்ற எண்ணற்ற தேசபக்தர்கள் பிரிட்டிஷ் குண்டாந்தடிகளால் கொல்லப்பட்டதையும் "மகத்தான பரம்பரை" என்று மான வெட்கமில்லாமல் வாய்கூசாமல் கூறுகிறார் நேரு.

தென் ஆப்பிரிக்காவிலும், இலங்கையிலும், பிஜித் தீவிலும் நம் நாட்டு மக்கள்—பிரிட்டிஷ் காமன்வெல்ததின் கீழ் சாராகப் பிழியப்படுவதைப்பற்றி ஒரு வார்த்தை, ஒரு ஆட்சேபனை நேருவின் பேச்சிலே தொனிக்கவில்லை.

மலேயாவிலே விடுதலை கோரி போராட்டத்திலே எழுந்துள்ள மக்களை, தலைவெட்டி வேடர்களைக் கொண்டு நரவேட்டையாடுகிறார்கள் பிரிட்டிஷ் ஏகாதிபத்யக் கொலை பாதகர்கள்! அந்த மலேயாவிலே வேறு காரணங்களுக்காக பிரிட்டிஷ் ஏகாதிபத்யம் இருக்கிறது என்று நேரு வக்காலத்து வாங்குகிறார். என்ன வேறு காரணங்களென்று அவர் சொல்லவில்லை. மேலும் இந்தியாவிலிருந்து மலேய மக்களின் விடுதலைப்போராட்டத்தை ஒடுக்க கூர்க்கப்படைகள் அனுப்பப் படுவதைப் பற்றி நேரு மவுனம் சாதிக்கிறார்.

அத்துடன் நின்றுவிடாமல் நேரு இன்னும் ஒரு படி மேலே சென்று, பிரிட்டனைக் காட்டிலும் ஆபத்தான வேறு ஏகாதிபத்யங்கள் இருக்கிறதென்று கூறினதின் மூலம், உலக மக்களின் விடுதலைக்கும், உலக சமாதானத்திற்கும் பாடுபட்டு வரும் சோவியத் யூனியனை மறைமுகமாகத் தாக்கினார். ஏகாதிபத்யவாதிகளின் உள்ளங்களிலே களிப்பை யூட்டினார்.

இந்தோ-சீனாவிலும், இந்தோனீஷியாவிலும் மக்களின் விடுதலைப் போராட்டங்களை ரத்த வெள்ளத்திலே மூழ்கடித்து வரும் பிரெஞ்சு, டச்சு ஏகாதிபத்யங்கள் நேருவுக்கு ஏகாதிபத்யங்களாகப் படவில்லை. பிலிப்பைனிலும், ஜப்பானிலும் ஆதிக்கம் செலுத்திக்கொண்டு, கொரியாவில் யுத்தத்திலிறங்கியுள்ள அமெரிக்கா, அவருக்கு ஏகாதிபத்யமாகத் தென்படவில்லை!

மேலும், மீண்டுமொரு உலக யுத்தம் ஏற்பட்டு கோடானு கோடி மக்கள் மண்ணாய்ப் போவதைத் தடுக்க, உலகத்திலே நிரந்தர சமாதானம் நிலவ, யுத்த வெறியர்களின் திட்டங்களுக்கெதிராக 60 கோடிக்கதிகமான மக்களைத் திரட்டியுள்ள உலக சமாதான இயக்கத்தை நேரு கிண்டல் செய்கிறார். அது வெளிநாடுகளுக்கு காசில்லாமல் சுற்றுப் பிரயாணம் செய்யும் இயக்கமாம்!

சமாதானம் என்று கூறுவதே அவருக்கு யுத்தம் என்று கூறும் ஆக்கிரமிப்புத் தோரணையிலிருக்கிறதாம். ஏகாதிபத்யவாதிகள் கூறும் வார்த்தைகளல்லவா இவை?

பார்லிமெண்டிலே இவ்வாறு பேசினதின் மூலமாக முழுக்க முழுக்க பண்டித நேரு, அமெரிக்க—பிரிட்டிஷ் ஏகாதிபத்யவாதிகள் என்ன விரும்புகின்றனரோ, அந்தக் காரியத்தை நேர்த்தியாக செய்து முடித்துள்ளார்.

பண்டித நேரு கொரியாவில் 38-வது அட்சரேகையை ஐ. நா. துருப்புகள் கடக்கக்கூடாது என்றும், அணுகுண்டுகளை உபயோகிக்கக் கூடாதென்றும், சீனாவை ஐ. நா. சபையில் சேர்க்க வேண்டுமென்றும் கூறியபோது நாம் அதை வரவேற்றோம். இப்பொழுதும் வரவேற்கிறோம்.

ஆனால், கோஜே தீவில் வடகொரிய யுத்தக் கைதிகளின் மீது அமெரிக்கர் நடத்திவரும் கொலை தாண்டவத்தைப் பற்றியோ விஷக்கிருமி யுத்தம் பற்றியோ ஒரு கண்டன வார்த்தைகூட அவர் வாயிலிருந்து வரவில்லை. தென்கொரிய சிங்மன்ரீயை நேரு கண்டித்ததின் மூலமாகவோ, பொதுப்படையாக விஷக்கிருமி யுத்தம் கூடாது என்று சொன்னதின் மூலமோ, யாரையும் ஏமாற்றிவிட முடியாது. விஷக்கிருமிகள் பிரயோகிக்கப் பட்டதென்று, பண்டிட் விஜயலட்சுமி கைகுலுக்கிப் பேசிய சீனப் பிரதமர் சௌ-என்-லாயே குற்றம் சாட்டினார். இந்தியாவிலிருந்து சீனா சென்று திரும்பிய வைத்திய கோஷ்டியினரே இதை ஆமோதித்துள்ளனர். அதைப் பற்றி நேரு மௌனம் சாதித்தார்.

ஆகவே பார்லிமெண்டில் வெளிநாட்டுக் கொள்கையைப்பற்றி நேரு பிரசங்கம் முழுக்க, முழுக்க ஏகாதிபத்தியவாதிகளுக்கு வக்காலத்து வாங்கும் பிரசங்கம். அதுமட்டுமல்ல; உலக சமாதான இயக்கத்தையே அவதூறு செய்யும் பிரசங்கம். நம் நாட்டின், நம் தேசிய இயக்கத்தின் ஏகாதிபத்திய எதிர்ப்புப் பரம்பரைக்கே துரோகம் செய்யும் பிரசங்கம்.

கம்யூனிஸ்ட் கட்சி உறுப்பினர் ஹீரன் முகர்ஜி, பார்லிமெண்டில் எடுத்துக் காட்டிய மாதிரி, பிரிட்டிஷ் காமன்வெல்திலிருந்து இந்தியா வெளியேறி, யுத்த முகாமுக்கெதிராக, உலக சமாதான முகாமுடன் சேர்ந்து நிற்பதின் மூலமாகவே, உண்மையில் இந்தியா உலகத்தில் சகல நாடுகளின் சுதந்திரத்திற்கும், உலக சமாதானத்திற்கும் ஆதரவாக நேர்மையான பாதையில் செல்வதாக ஆக முடியும்.

## வெளிநாட்டு மூலதனத்திற்கு இந்தியா வரவேற்பு!

### லண்டன் டைம்ஸ் பாராட்டு!

நியூயார்க், ஜூன். 13—

இந்தியா சுதந்திரம் பெற்றுவிட்டதாகக் கூறப்படும் நாளிலிருந்து இந்தியாவில் 3½ கோடி டாலர் மூலதனம் போடப்பட்டுள்ள 22 வெளிநாட்டு கம்பெனிகள் நிறுவப்பட்டுள்ளன என்று நிதி மந்திரி தேஷ்முக் கூறியுள்ளதைப்பற்றி லண்டன் டைம்ஸ் பத்திரிகை தலையங்கம் ஒன்றுஎழுதியுள்ளது,

"இந்தியா அரசுரிமை எய்திய பிறகு, வெளிநாட்டு மூலதனம் இந்தியாவில் இருப்பது பற்றி ஒரு திட்டவட்டமான ஏற்பாடு இல்லாமலிருந்தது. வெளிநாட்டு மூலதனத்தை இந்தியாவில் இருக்கும்படி செய்து விட்டால் 'புதிய ஏகாதிபத்யம்' தலைதூக்கிவிடும், என்று இடையிடையே குரல்கள் எழுப்பப்பட்டன. இந்திய மக்களைச் 'சுரண்டுவதற்கு' தான் வெளிநாட்டு மூலதனம் இருக்க அனுமதிப்பது என்ற பேச்சும் எழுந்தது" என்று அந்தத் தலையங்கத்தில் அது கூறியுள்ளது.

"இம்மாதிரியாக ஏற்பட்டிருந்த ஒரு சங்கடமான சூழ்நிலைமை இன்று விலகி வருகின்றது. தொழிற் துறையில் பெரும் அளவில் தேசியமயமாக்குவது பற்றிய திட்டங்கள் நீண்ட காலத்திற்கு நடைமுறைக்கு வராது என்றும், அப்படி கொள்கையில் ஏதாவது மாற்றம் ஏற்பட்டு தேசிய மயமாக்க நேர்ந்தால், போதிய நஷ்டஈடு கொடுக்கப்படும் என்ற உறுதியையும் இந்திய சர்க்கார் கொடுத்துள்ளது.

மூலதனம் போடுவதை இன்று வரவேற்கிறார்கள். இந்தியாவிற்கு வெளிநாட்டு மூலதனம் இன்றியமையாததால் இப்படி வரவேற்பது விரும்பத்தக்கதே." எனவும் டைம்ஸ் மகிழ்கிறது.

"இதிலிருந்து இந்திய பொருளாதார வாழ்வில் எத்தகைய கண்ணோட்டம் காட்டப்படுகிறது என்பதையும், மேற்கு நாடுகளிடம் இந்தியா கொண்டுவரும் போக்கு எத்தகையது என்பதை நிர்ணயிக்கவும் ஏதுவாகிறது" என இந்திய சர்க்கார் கொள்கையை உச்சிமேல் வைத்துப் புகழ்ந்து எழுதியுள்ளது பிரிட்டிஷ் ஏகாதிபத்ய பத்திரிகையான டைம்ஸ்

## டாலர் திருடர்கள்

அமெரிக்க யுத்த இலாகாவிலிருந்து 1951ஜனவரி 1ம் தேதியிலிருந்து 1952 பிப்ரவரி 9ம் தேதிவரையுள்ள காலத்திற்குள் 51,14,000 டாலர் மதிப்புள்ள பொருள்களை கள்ள மார்க்கெட் விற்றுள்ளதாக, அமெரிக்க செனட் யுத்த தயாரிப்பு சப்-கமிட்டி கணக்கிட்டுள்ளது.

யுத்தபீதியைக் கிளப்பிவிட்டு இவ்வாறு கொள்ளை லாபமடிக்கின்றனர் டாலர்நாட்டு கொள்ளைக்கார முதலாளித்வ கும்பல்.

---

கோவை பார்லிமெண்ட் தொகுதி உபதேர்தலில் ஜூன் 16ந் தேதி ஓட்டுகள் எண்ணப்படும். முடிவு விபரம் 17ந் தேதி அறிவிக்கப்படும் என்று தெரிகிறது.

## தொழிலாளர் தலைவர் கைது

சிங்கப்பூர், ஜூன் 14—

சிங்கப்பூர் தொழிற்கட்சியின் முன்னாள் செயலாளரான பீடர் வில்லியம்ஸ் இன்று அவருடைய வீட்டில் கைது செய்யப்பட்டார்.

இன்றிரவு நடைபெறவிருக்கும் தொழிற்கட்சி பொதுக் குழுக் கூட்டத்தில் அவர் மலேய கம்யூனிஸ்ட் கட்சியை சட்டபூர்வமாக்க வேண்டுமென்றும், கம்யூனிஸ்ட் கைதிகளுக்கு பொது விடுதலை கொடுக்க வேண்டுமென்றும் தீர்மானத்தில் கொண்டுவர இருந்தார். இதைத் தடுக்கவே மலேய சர்க்கார் அவரைக் கைது செய்துள்ளது. அவர் விடுத்துள்ள அறிக்கையில், "நான் அமலிலிருக்கும் எந்தச் சட்டத்தையும் உடைக்கவில்லை. ஆயினும் சர்க்காருக்கு பிடித்தமில்லாத சில கொள்கையை நான் வைத்திருப்பதால் அவர்கள் என்னை கைது செய்திருக்கிறார்கள்," என்று கூறியுள்ளார்.

தொழிற்கட்சியிலுள்ள திரு. தசரதராஜ் என்பவர் சர்க்காரின் செயலை கண்டித்து அறிக்கை விடுத்துள்ளார்.

## மைசூர் முதலமைச்சர் சம்பளம் 74 சத விகிதம் உயர்ந்தது

### மந்திரிகளுக்கு 30 சத விகிதம்

பங்களூர், ஜூன் 13—

பங்களூர் காங்கிரஸ் மந்திரிகள் தங்கள் சம்பளத்தை ரூ. 800 லிருந்து ரூ, 1,000 மாக அதிகப்படுத்திக் கொள்ள ஒரு சட்டம் கொண்டு வருகிறார்கள். கார் அலவன்ஸ் ரூ. 150 லிருந்து ரூ, 250 ஆக உயருமாம். வீட்டு அலவன்சும் ரூ. 200 லிருந்து 250 ஆகும். இது தவிர முதலமைச்சருக்கு ரூ. 500 அதிக சம்பளம் தரப்படுமாம்.

இதுவரை மொத்தம் ரூ. 1,150 வருமானமாகப் பெற்ற மந்திரிகளுக்கு இனிமேல் ரூ. 1,500 கிடைக்கும். அதாவது வருமானத்தில் சுமார் 30 சத விகிதம் அதிகரிப்பு. முதலமைச்சருக்கு இனிமேல் வருமானம் ரூ. 2,000. அதாவது சுமார் 74 சதவிகிதம் அதிகரிப்பு.

ஆனால் ஜீவன சம்பளம் கோரும் தொழிலாள விவசாயிகளுக்கு கிடைப்பது அடக்குமுறை.

## காங்கிரஸை தோற்கடியுங்கள்

### அருப்புக்கோட்டை உப-தேர்தலில்

9-6-52 அன்று கோவில்பட்டி காந்தி மைதானத்தில் ஐக்கிய ஜனநாயக முன்னணியின் சார்பில் ஓர் தேர்தல் பொதுக் கூட்டம் நடைபெற்றது. அக் கூட்டத்திற்கு என். ஆர். சீனிவாசன் தலைமை வகித்தார். நெல்லை ஜில்லா சதி வழக்கில் சம்பந்தப்பட்ட ஆர். வி. அனந்தகிருஷ்ணன், மதுரை செங்கதிர் பத்திரிகை ஆசிரியர் காமராஜ், பஞ்சாலை தொழிலாளர் காரியதரிசியான ஆதி நாராயணன் அவர்களும் நாலரை ஆண்டு காங்கிரஸ் ஆட்சியில் மக்கள்பட்ட இன்னல்களைப் பற்றி விரிவாகப்பேசி, எம். டி. இராமசாமியை தேர்ந்தெடுக்கும்படியும் கூறினார்கள்.

பின்பு எஸ். பி. ஆதித்தன் அவர்கள் ரேஷன் ஒழிப்பினால் கொள்ளை லாபக்காரர்களுக்கே வேட்டை. பொது மக்களுக்கு எவ்வித நன்மையும் இல்லை. காந்தியின் விருப்பப்படி காங்கிரஸை கலைக்க வேண்டும் என்றும், மக்களின் சக்தியின் முன்பு ஆச்சாரியார் அடக்குமுறை தவிடுபொடியாகும் என்றும் தெரிவித்தார்.

எம். டி. ராமசாமி பேசியதாவது "கடந்த மூன்று ஆண்டுகளாக நான் அருப்புக்கோட்டை சேர்மனாக இருந்து சேவை செய்து வருகிறேன். எனக்கு எப்பொழுதுமே மக்களுக்கு சேவை செய்வதில் தனி விருப்பம் உண்டு. நான் காங்கிரஸ் அபேட்சகரைப் போல் பணக்காரன் அல்ல. சதா ஏழையைப் பற்றியே சிந்திப்பவன். மூன்றாவது, நான் நெசவு செய்யும் வகுப்பைச் சேர்ந்தவன். ஆகவே இந்த தேர்தலில் எனக்கு உங்கள் ஓட்டுக்களைப் போட்டு ஆதரிக்க வேண்டு"மென்று கேட்டுக் கொண்டார். (ந.கி.)

## சேலத்தில் 144

சேலம்; ஜூன் 14—

தீ மிதித்தல், அலகு குத்துதல் போன்ற செயல்களை செய்து காட்டுவதற்கு கடவுளின் "அனுக்கிரஹம்" தேவையில்லையென நிரூபிக்க சேலம் திராவிடக் கழக மாநாட்டில் அவைகளை நடத்திக் காட்டுவதற்கு ஏற்பாடாயிருந்தது.

இது செய்து காட்டப்படுமானால் மக்களிடம் உள்ள மூட நம்பிக்கைகள் ஒழிவதற்கு வழியேற்படும் என்று உணர்ந்த சர்க்கார் சேலத்திலும் அதை சுற்றியுள்ள 5 மைல் பிரதேசங்களில் அதைச் செய்து காட்டக் கூடாதென்று 144 தடையுத்தரவு பிறப்பித்துள்ளது. இவ்வுத்தரவு சேலம் தாலுக்கா மாஜிஸ்ட்ரேட்டால் பிறப்பிக்கப்பட்டுள்ளது. இது இன்னும் 5 நாட்களுக்கு அமுலில் இருக்கும். இதுபோன்ற காரியங்கள் செய்யப்படுமானால் அமைதிக்குப் பங்கம் ஏற்படுமாம்!

❋

## கடப்பையில் மழையால் பெருத்த சேதம்

கடப்பா, ஜூன் 14—

சமீபத்தில் பெய்த பெருமழையால் கடப்பா ஜில்லாவில் அதிக சேதம் விளைந்துள்ளதாகவும், இதற்கு உடனடியாக நிவாரணமளிக்க வேண்டுமென்றும் கோரி திரு. ராஜகோபாலாச்சாரியாரிடம், கடப்பா ஜில்லா பஞ்ச நிவாரணக் கமிட்டி ஒரு மகஜர் சமர்ப்பித்தது.

முதலமைச்சர் ராயலசீமாவில் சுற்றுப் பிரயாணம் செய்து வருகிறார். அவர் சென்ற இடங்களிலெல்லாம் பொது மக்கள் தங்கள் குறைகள் அடங்கிய மகஜர்களை சமர்ப்பித்தனர். பஞ்சநிவாரண வேலைகளை நிறுத்திவிடக் கூடாதென்றும், அதைத் தொடர்ந்து நடத்தவேண்டுமென்றும் அவர்கள் கோரினர்.

பெருமழை காரணமாக ஏரி குளம் உடைந்ததால் கடப்பையில் மட்டும் 50,000 ஆடுகளும், 40,000 மாடுகளும் இறந்துவிட்டதாகவும், ஆயிரக் கணக்கான மக்கள் வீடின்றித் தவிப்பதாகவும் அந்த மகஜர் கூறுகிறது. உடனடியாக 50 லட்சம் ரூபாய் தக்காவிக் கடனாகவும், 50 லட்சம் ரூபாய் இதர செலவுகளுக்காகவும், 30 லட்சம் காளை மாடுகள் வாங்கவும் சர்க்கார் வட்டியின்றி கொடுத்துதவவேண்டுமென்றும், விவசாயக்கடன்கள் ஒத்திவைக்கப்பட வேண்டும், வரி வஜா செய்யப்பட வேண்டும், என்றும் மகஜர் கோருகிறது.

★

## சுற்றுமுற்றும்

வெனிஜுலா ராஜ்யத்தில் சோவியத் ஸ்தானீகராலயத்திலிருந்து இரண்டு உத்யோகஸ்தர்கள் வெளியேற்றப்பட்டதைக் கண்டித்து, சோவியத் யூனியன் வெனிஜுலாவுடன் ராஜதந்திர உறவுகளை முறித்துக்கொண்டது. (வெனிஜுலா டாலர் ஆதிக்கத்திலுள்ள ஒரு தென் அமெரிக்க நாடு).

●

சோவியத் உதவி வெளிநாட்டு மந்திரியாயிருந்த ஆண்ட்ரீ குரோமிகோ, பிரிட்டனில் சோவியத் ஸ்தானீகராக நியமிக்கப்பட்டிருக்கிறார்.

●

"கோஜே" தீவில் நடைபெற்ற சம்பவங்களை பரிசீலனை செய்ய 5 நடுநிலைமை நாட்டு ராணுவத் தலைவர்களை அனுமதிக்க சம்மதிக்கும் ட்ரூமன் பேச்சைப்பற்றி பீகிங் ரேடியோ விமர்சனம் செய்கையில், அமெரிக்கா குற்றவாளி என்பதையே இது காட்டுகிறது, என்று கூறிற்று.

●

கொரியாவில் கம்யூனிஸ்டுகள் முழுமூச்சுடன் தாக்குதலை ஆரம்பித்தால் அதை சமாளிக்க நமக்கு போதிய ஆள் பலம் கிடையாது என்று கூறிய மேஜர் ஜெனரல் டேனியல் ஹடெல்ஸன் என்பவர் உயர்தர அதிகாரியால் நன்கு கண்டிக்கப்பட்டார் என்பது மாத்திரமல்ல; சில நாட்களில் அவருக்கு வேலையே போய் விடும் என்று அறிவிக்கப்படுகிறது.

# தோழர் சி. ஏ. பாலனுக்கு

## அகில இந்திய தொழிற்சங்க காங்கிரஸ் கடிதம்

பம்பாய், ஜுன் 11—

அன்புமிக்க தோழர் பாலன்,

சென்னை ஹைகோர்ட்டால் உங்களுக்கு விதிக்கப்பட்ட மரண தண்டனையை சுப்ரீம்கோர்ட் ஊர்ஜிதம் செய்ததைக் கண்டு நாடு முழுவதுமுள்ள தொழிலாளி வர்க்கம் திடுக்கிட்டது. தூக்கு மேடையிலிருந்து தங்கள் ஆருயிர்த் தலைவனை காப்பாற்றுவதற்காகக் காரியத்திலிறங்க வேண்டுமென்ற உணர்ச்சிப் பெருக்கும் ஆத்திரமும் மக்களை இயக்கி வருகின்றது. கடிதங்களும், தந்திகளும், தீர்மானங்களும் நாட்டின் ஒவ்வொரு மூலை முடுக்கிலிருந்தும், ஜனாதிபதிக்குச் சென்று குவிந்து கொண்டிருக்கின்றன.

உலகத் தொழிற்சங்க சம்மேளனத்திலிருந்து தோழர் மேரி வொல்பார்ட் எழுதிய கடிதமொன்று, இன்று எங்களுக்குக் கிடைத்துள்ளது. அதில் அவர் பின் வருமாறு கூறுகிறார்:—

“மே 29ந் தேதிய கிராஸ் ரோட்ஸ் பத்திரிகையில், தோழர் பாலன் உலகத் தொழிற் சங்க சம்மேளனத்திற்கு தன்னுடைய வாழ்த்துச் செய்தியை அனுப்புகிறார் என்ற செய்தியைப் பார்த்தேன். அவருடன் நேரடியாக எப்படி தொடர்பு வைத்துக்கொள்வது என்று தெரியாததால், உங்களுக்கு எழுதுகிறேன், நீங்கள் அவருக்கு எங்கள்வந்தனத்தைத் தெரிவியுங்கள்; அவர் சீக்கிரமே விடுதலையடைந்து, பொது மக்களுக்கு மீண்டும் சேவை செய்ய வருவதற்கு எங்களுடைய உயர்ந்த நல்லாசியைத் தெரிவியுங்கள்.”

அ. இ. தொ. ச. காங்கிரசுடன், நாட்டிலுள்ள தொழிலாளி வர்க்கம் பூராவுமே. உ. தொ. ச. ச. சார்பில் தோழர் மேரி வொல்பார்ட் தெரிவித்தமாதிரி தன்னுடைய உணர்ச்சிகளை உங்களுக்குத் தெரிவித்துக்கொள்கிறது.

உள்ளங்கனிந்த தொழிற்சங்க வாழ்த்துக்கள்,
உங்கள் தோழமையுள்ள,

**ஜீ வி. சிட்னிஸ்**
ஆபீஸ் காரியதரிசி

## ராமநாதபுரம் சதிவழக்கு

மதுரை, ஜுன் 6—

எதிரிதரப்பில் விசாரிக்கப்பட்ட சாட்சிகள், எதிரிகள் கையெழுத்தென்று கோர்ட்டில் சமர்ப்பிக்கப்பட்ட தஸ்தாவேஜுகளில் காணப்படுபவை அவர்களுடையதல்லவென்று சாட்சியம் கூறினர்.

அல்கீராஜ், அழகப்பராஜா கையெழுத்துக்கள் அல்லவென்று இராஜபாளையம் சாட்சிகள், ராமரும், குப்பராஜாவும்; 58 வது எதிரியான ராமனது அல்லவென்று கீழப்பசலை கூழுசேர்வையும், செல்லமும்; பேராசிரியர் சங்கர நாராயணனது அல்லவென்று விருதுநகர் செந்திக்குமார நாடார் கல்லூரி கணக்காயர் வணங்காமுடியும், கணித விரிவுரையாளர் பி. அனந்தபத்மநாபனும் சாட்சியம் கூறினர்.

வத்திராயிருப்பு போலீஸ் ஸ்டேஷன் தாக்கப்பட்டபோது 19-8-49-ம் தேதி இரவில் அங்கிருந்ததாகச் சொல்லப்படும் 16 வது எதிரியான தருமலிங்கத்தேவர் அன்றிரவு மாத்தூரில் தன் தம்பி நிச்சயதார்த்தத்திற்காக இருந்தார் என்று மாத்தூர் கந்தசாமித் தேவரும், வீரகுமார் தேவரும் சாட்சியமளித்தனர்.

சர்க்கார் தரப்பு சாட்சியான துரைசாமி மூப்பனுருக்கும், வழக்கிலுள்ள சில எதிரிகளுக்கும் பகை உண்டு என்பதை நிரூபிக்கும் சில தஸ்தாவேஜுகளை, இராமச்சந்திரபுரம் குருசாமி கோர்ட்டில் தாக்கல் செய்தார்.

52வது எதிரி மாரிமுத்தும், அப்ரூவர்களான நல்லழகும், வெள்ளைச்சாமியும், விருதுநகர், இராஜபாளையம், ஸ்ரீவில்லிப்புத்தூரில் 1949 டிசம்பர் முதல் 1950 ஆகஸ்ட் வரை போலீஸ் கண்காணிப்பில் இருந்ததுபற்றி விபரமாக, சிவகாசி கட்டிமுத்து சாட்சியமளித்தார். 52வது எதிரியின் கையெழுத்து அல்ல கோர்ட்டில் சமர்ப்பிக்கப்பட்ட தஸ்தாவேஜில் இருப்பது என்றார்.

மதுரை மங்கம்மாள் சத்திர மானேஜர், வந்து தங்குவோரின் பெயர்களடங்கிய புத்தகத்தை தாக்கல் செய்தார். 23வது எதிரியான ஏ.கே. சுப்பையா, 19-8-49 தேதி இரவு 9½ மணி முதல் மறுநாள் காலை 7 மணி வரை சத்திரத்தில் தங்கியிருந்ததாக சாட்சியமளித்தார். அவர் அன்று வத்திராயிருப்பு போலீஸ் ஸ்டேஷன் தாக்குதல் கூட்டத்தில் இருந்தாரென்பது போலீஸ் சாட்சியம்.

எதிரி தரப்பு சாட்சியங்கள் இன்றுடன் முடிந்து, 9ம் தேதி முதல் இருதரப்பு விவாதங்கள் தொடங்கின. (ந. நி.)

<u>பேராவூரணி</u>

## இனம் ஒழிந்த லட்சணம்

நெல்லடிக்காடு என்ற இனம் கிராமத்தில் சிதம்பரஞ் செட்டியார் என்ற மேல்வாரதாரரின் ஆக்கிரமிப்பால் 700 ஏக்கர் நிலம் தரிசாகக் கிடக்கிறது. காரணம் இனம் ஒழிக்கப்பட்ட பிறகு இந்நிலத்தில் பாடுபட்ட விவசாயிகள் தங்களுக்கு குடிக்காணி பாத்தியமுண்டு என்று கேட்பதால் போலீசின் ஆதரவுடன் இதுவரை சாகுபடி செய்யப்பட்டு வந்த 200 ஏக்கர் நஞ்சை நிலத்திலிருந்து விரட்டுவதற்குத் திட்டமிட்டு புரக்குடி முச்சலிக்கை எழுதி வாங்க முன் வந்து விட்டார். மாவுக்கு 4 கலம் குத்தகை, 1 கட்டு வைக்கோல் திரை, 1 ஏரு, ஆள் மேல் வாரதாருக்கு உழுவதற்கு சேவை செய்யச் செல்வது இது போன்ற நிபந்தனைகளுடன் முச்சலிக்கை எழுதி வாங்குகிறார். இதன் மூலம் மேல்வாரதாரர் விரும்பினால் எந்த நிமிஷமும் நிலத்திலிருந்து விரட்டலாம். ஆச்சாரியார் ஆட்சியில் இனம் ஒழிக்கப்படும் விதம் இது தான்.

## கைத்தறியாளர் அவதி

அருப்புக்கோட்டை, ஜுன் 8—

இங்குள்ள கூட்டுறவு மத்திய நிலையத்தால் (கலெக்டிவ் சென்டரால்) தறி நெய்யும் நெசவாளருக்கு கடந்த 2½ மாத காலமாக நூல் கொடுக்காததால் அவர்கள் தங்கள் பண்ட பாத்திரங்களை விற்று சாப்பிட்டு வருகிறார்கள். கூட்டுறவு மத்திய நிலையத்தை கூட்டுறவு சங்கமாக மாற்ற வேண்டுமென்று கைத்தறியாளர்கள் கோருகின்றனர். நிர்வாகமோ, சர்க்காரோ இது சம்பந்தமாக ஒரு நடவடிக்கையும் எடுக்கவில்லை.

ஆசிரியர்
ஜனசக்தி
சென்னை.14

## ஹெட்மாஸ்டர் கெடுபிடி

தோழரே,

அவ்வூர் போர்டு ஹைஸ்கூல் தலைமை ஆசிரியர் உயர் வகுப்பு மாணவர்களுக்கு வழக்கமான சம்பளம், ஸ்பெஷல் பீசுகளையும் தவிர அதிகமாக ரூ. 10ம், மிடில் ஸ்கூல் வகுப்பு மாணவர்களுக்கு ரூ. 5-ம் புஸ்தக வகைக்கென்று கட்டச் சொல்லிக் கட்டாயப்படுத்துகிறார். கொடுக்காத மாணவர்களின் மற்றச் சம்பளத்தையும் வாங்க மறுக்கிறார். இந்தச் சட்டவிரோத வசூலுக்கு ரசீது கொடுப்பதும் கிடையாது. இதனால் ஒவ்வொரு பையனும் மொத்தமாக ரூ. 25-ம் ரூ. 15-ம் கட்ட வேண்டியிருக்கிறது. இத்தொகை கட்ட முடியாத ஏழை மாணவர்கள் படிப்பை நிறுத்த வேண்டியிருக்கிறது. மேலும் மேற்படி அதிகத் தொகை கட்ட முடியாத மாணவர்களின் பெயர் இம்மாதம் முடியும் வரை கட்டாவிட்டால் எடுக்கப்படுமென்றும் தெரிகிறது. இது விஷயமாக ஜில்லாக் கல்வி அதிகாரிக்கும், ஜில்லா போர்டு தலைவருக்கும், தந்தி, மனுக்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இதுவரையாதொரு நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை. அரசாங்கம் இதில் தலையிட்டு ஆவன செய்ய வேண்டும்.

**மு சொக்கலிங்கம்**

வள்ளியூர் 9-6-52 } காரியதரிசி, கம்யூனிஸ்ட் கட்சி.

●

## மித்திரன் பொய்ப்பிரச்சாரம்

தோழரே,

சுதேசமித்திரன் சென்னை 10-6-52 வெளியூர் 11-6-52 பத்திரிகை பக்கம் 2, பத்தி 2ல், பட்டுக்கோட்டையில் அரிசி பிரளயம்; ரூபாய்க்கு 2 பட்டணம் படி அரிசி கிடைக்கிறது. என்றும் தலையங்கத்தின்கீழ் செய்திகள் வெளிவந்துள்ளன. இச்செய்தி, உண்மை கலப்பில்லாத முழு கற்பனைப் பொய். இச்செய்தி காட்டுத் தீபோல் பட்டுக்கோட்டை முழுவதும் பரவ, காங்கிரஸ்காரர்கள் தங்கள் மந்திரிசபைக்கு ஆதரவு தேட செய்யும் கற்பனை பொய் பிரச்சாரத்தை கண்டு காங்கிரஸ்காரர்களின் சு. மி. பொய் பிரச்சார பத்திரிகை என்றும் மக்கள் எங்கும் இதே பேச்சாகப் பேசி ஆத்திரப்படுகிறார்கள். ஆத்திரம்கொண்ட மக்கள் 12-6-52 காலை சு. மி. ஏஜண்டை பட்டுக்கோட்டை ஆர். எஸ்.ஸில் கண்டு, ரூபாய்க்கு 2 பட்டணம் படி அரிசி வாங்கித் தரும்படி கேட்டார்கள். நான் எழுதவில்லை, நிருபர் சேஷாதிரி அய்யர் எழுதியதாகக் கூறினார். ஜனநாயக முற்போக்கு வாலிபர் சங்க உப காரியதரிசி கே. எம். ஷாஹுல் ஹமீத் ஆகிய நான் மேற்படி நிருபரை பேட்டி கண்டு மரக்கால் 1-7-0 முதல் 1-8-0 வரை விற்கும் நிலவரத்தை இன்று சுதேசமித்திரனுக்கு எழுதும்படி கூறினேன். அப்படியே எழுதியுள்ளார்.

**ஷாஹுல் ஹமீத்**

## நேரு சர்க்காரின் கொள்கை

1950 முதல் சென்னையிலிருந்து கட்டுப்பாடு இல்லாமல் மிளகாய் வத்தல் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்வதை, இந்திய அரசாங்க வர்த்தக இலாகா அநுமதித்துவந்தது. இதனால் சில ஏற்றுமதியாளர்கள் முந்திக்கொண்டு, துறைமுக சுங்க அதிகாரிகளிடம் ஏற்றுமதி உத்தரவு நொடிப்பொழுதில் வாங்கிவிடுவார்கள். பெரும் அளவு ஏற்றுமதி வியாபாரிகள் ஏமாந்து போவார்கள். இதை வர்த்தக இலாகா மந்திரிக்கும், பிரதம ஏற்றுமதிக் கட்டுப்பாடு அதிகாரிக்கும் தூத்துக்குடி, மதுரை, திண்டுக்கல் ஏற்றுமதி வியாபாரிகள் சங்கங்களின் மூலம் மகஜர் சமர்ப்பித்ததின் விளைவாக, ஏற்கனவே ஏற்றுமதி செய்து வருபவர்கள், 3 மாதங்களுக்கு 15 டன் வீதம் ஏற்றுமதி செய்யலாம் என்று சென்னை உதவிப் பிரதம ஏற்றுமதிக் கட்டுப்பாடு அதிகாரி உத்தரவிட்டார்.

ஆனால் இதையறிந்த சில காங்கிரஸ் கொள்ளைலாப வியாபாரக் கூட்டம், டில்லிக்குக் காவடி எடுத்து, மேற்படி உத்தரவை தங்களுக்கு சாதகமாக மாற்றிவிட்டார்கள். இதனால் ஏற்றுமதி வியாபாரத்திலீடுபட்டுள்ள பல வியாபாரிகள் மிகவும் பாதிக்கப்பட்டுள்ளனர். இதுபற்றி தமிழ் நாட்டிலுள்ள வியாபார சங்கங்கள், இந்திய வர்த்தக இலாகாவிடம் முறையிட்டும், இதுவரை ஒருபலனும் ஏற்படவில்லை.

மிளகாய் வத்தல், நிலக்கடலை எண்ணெய், வெங்காயம்போன்ற பொருள்களை ஏற்றுமதி செய்வதால், பெரும்பாலான வியாபாரிகளின் நலத்திற்கேற்ற கொள்கையை ஜனநாயக-விரோத காங்கிரஸ் சர்க்கார் நிறுவ மறுத்து வருகிறது. (ந. நி.)

# மலைபோல் குவியும் தந்திகள்!

தோழர் சி. ஏ. பாலன் தொழிலாளிகளின் நல்வாழ்க்கைக்காகவே பாடுபட்டார். சுயநலம் என்பது சிறிதுமின்றி, நாட்டிலே சோஷலிஸ்டு சமுதாய அமைப்பு ஏற்பட வேண்டுமென்பதற்காகவே தன் வாழ்நாளை அர்ப்பணம் செய்தார். அத்தகைய தோழர் அரசியல் காரணங்களுக்காகத் தூக்கிலிடப்படக்கூடாது என்று நாடெங்கும் தந்திகளும், மகஜர்களும் ஜனாதிபதிக்குச் சென்று குவிந்த வண்ணமிருக்கின்றன.

கோட்டக் குப்பம் அரசியல் அகதிகள் ஜெனரல்பாடிக் கூட்டம், சேலம் ஜில்லா விவசாய சங்க ஆர்கனைசிங் கமிட்டிக் கூட்டம், பெங்களூர் மினர்வா மில் தொழிற்சங்க தொண்டர்படைக் கமிட்டி, சென்னை மாம்பலம் ஹோட்டல் தொழிலாளர்கள், சென்னை பெத்துநாய்க்கன்பேட்டை திருவள்ளுவர் மன்றம், கண்ணம்பாளையம் பொதுஜனங்கள், சென்னை ஆரியபவன் ஓட்டல் தொழிலாளர்கள், ஆமதாபாத் மணிநகர் முற்போக்கு வாலிபர் சங்கம், கல்லிடைக்குறிச்சி ஐக்ய ஜனநாயக முன்னணி, பாபநாசம் மின்சாரத் தொழிலாளர் சங்கம், விஸ்வநாதப்பேரி கம்யூனிஸ்ட் கட்சி, முருங்கப்பாளையம் மக்கள் வாசக சாலை, சென்னை கரீம் பீடி தொழிலாளர் இருவர், வாசுதேவநல்லூர் கம்யூனிஸ்ட் கட்சி, திருவல்லிக்கேணி கிருஷ்ணபவன் ஓட்டல் தொழிலாளிகள், நாங்குனேரி முற்போக்கு வாலிபர் சங்கம், பம்பாய் ஜனசக்தி ஏஜண்டு டி. சி. பிச்சையா, ஏ. மாடசாமி, ஐசக் செல்லத்துரை, துறையூர் கம்யூனிஸ்ட் கட்சி, துறையூர் சுருட்டுத் தொழிலாளிகள், பொதுமக்கள், பட்டுக்கோட்டை கம்யூனிஸ்ட் கட்சி, ஜனநாயக முற்போக்கு வாலிபர் சங்கம், இரவிப்புத்தூர் (நாகர்கோயில்) மோகன்காந்தி, பவானி தாலுக்கா கம்யூனிஸ்ட் கட்சி, இ-துசாரி சோஷலிஸ்ட் கட்சி, பனியன் வியாபாரிகள் சங்கம், வாலிபர் சங்கம் (கடையம்பட்டி), ஐக்கிய சக்தி நாடக சபா (கடையம்பட்டி), கே. என். காளியண்ணன், பி. எஸ். வீரப்பன், தென் இந்திய ரயில்வேலேபர் யூனியன் (செங்கோட்டை கிளை), வேலூர் பசுமான் பீடித் தொழிலாளர் 200 பேர், திருத்தங்கல் பஞ்சாயத்து போர்டு, கம்யூனிஸ்ட் கட்சி, வர்த்தகர்கள் சங்கம், திரு. செல்லையா நாடார் (விவசாயி) ஆகிய ஸ்தாபனங்களின் சார்பிலும், தனி நபர்களின் சார்பிலும் தந்திகளும், மகஜர்களும் ஜனாதிபதிக்கு அனுப்பப்பட்டுள்ளன.

நீங்களும் உங்கள் கடமையை செய்து விட்டீர்களா?

## ஏகாதிபத்ய நடுக்கம்

வடகொரியர்களும் சீனர்களும் போர்முனையில் மிகப்பெரிய அரண்மனை கட்டி வருகிறார்களென்றும் 9 மைல் தூரம் பூமிக்குள்ளேயே செல்லக்கூடிய சுரங்கப் பாதைகளையெல்லாம் கட்டி வருகிறார்களென்றும், 10 லட்சம் துருப்புகளை அவர்கள் தயாராக வைத்திருக்கிறார்களென்றும், கொரியாவிலுள்ள பிரிட்டிஷ் தளபதி கேஸ்ஸல், இப்பொழுது அங்கு சென்றுள்ள பிரிட்டிஷ் யுத்த மந்திரி அலெக்ஸாண்டரிடம் அபாய அறிவிப்பைக் கொடுத்திருக்கிறான்.

# குடியாத்தம் பஞ்சாலைத் தொழிலாளர் மகாநாடு

குடியாத்தம், ஜுன் 13—

10-6-52ல் குடியாத்தம் பஞ்சாலைத் தொழிலாளர் சங்கத்தின் ஆண்டு விழா வேலூர் தொழிலாளர் தலைவர் தோழர் கே. ஆர். சுந்தரம் தலைமையில் நடைபெற்றது.

தோழர் ஜீவா மகாநாட்டிலும் மாலையில் நடைபெற்ற பொதுக் கூட்டத்திலும் காங்கிரஸ் ஆட்சியை ஒழித்துக்கட்ட வேண்டிய தன் அவசியத்தைப்பற்றி சொற்பொழிவாற்றினர்.

மகாநாட்டில் நிறைவேறிய முக்கிய தீர்மானங்களாவன.

(1) 1948ல் கொடுக்கப்பட்ட சம்பளத்தையும் பஞ்சப்படியையும் சேர்த்து சம்பளமாகக் கொடுத்தல்

(2) விலைவாசி புள்ளிக்கு 0-4-0 வீதம் பஞ்சப்படி

(3) இடைக்கால நிவாரணம் 1-4-52முதல்ரூ.15/-கொடுத்தல்.

(4) நீக்கப்பட்ட தொழிலாளிகளை வேலைக்கெடுத்தல்; நஷ்டஈடு கொடுத்தல்

(5) வாடகையின்றி வீடு; அதுவரை மாதம் ரூ.5/-வாடகைப்படி

(6) 4 மாத போனஸ்

(7) சம்பளம் பஞ்சப்படியுடன் 45 நாட்கள் விடுமுறை

**ராஜேஸ்வரி மில்**

திருமகள்மில்தொழிலாளருக்கு கொடுப்பது போன்று சகல வசதிகளும் செய்து கொடுக்கப்பட வேண்டும்.

**தென்னிந்திய சில்க் மில்**

(1) அடிப்படைச் சம்பளம் ரூ. 40/- கொடுத்தல்

2. பஞ்சாலைத்தொழிலாளருக்குக் கொடுப்பது போல்பஞ்சப்படி.

3. வேலையில்லாத நாட்களுக்கு முழுச் சம்பளம்.

4. 2 மாத போனஸ்.

5. சங்கத்தை அங்கீகரிக்க வேண்டும்.

6. நீக்கிய தொழிலாளரை வேலைக்கு எடுத்தல்.

இது தவிர பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்திற்குச் சொந்தமான சகல சொத்துக்களையும் பறிமுதல் செய்ய வேண்டுமென்றும், பாலன் தூக்கு தண்டனையை ரத்து செய்ய வேண்டுமென்றும், நிலப் பிரபுக்களுக்கும் மடாதிபதிகளுக்கும் சொந்தமான, நிலங்களை பிடுங்கி விவசாயிகளுக்கு அளிக்க வேண்டுமென்றும், கைத்தறி, தோல் தொழிலில் ஏற்பட்டுள்ள நெருக்கடியைத் தீர்க்க வேண்டுமென்றும், விஷக்கிருமி யுத்தத்தை கண்டித்தும் பல தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

●

## ஷாப் சட்டம்

ஐயா,

தஞ்சை நகரில் ஷாப் ஆக்ட் சரிவர நடத்தப்படுவதில்லை. மாதத்திற்கு ஓர் முறை இன்ஸ்பெக்டர் வருவார், வந்து கடைகளில் உள்ள சாமான்கள் என்ன விலை என்று கேட்பார், பிறகு பிடித்தமான சாமான்களை கடனுக்கு வாங்கிக்கொண்டு போய்விடுவார். இன்ஸ்பெக்டரைக்கண்ட கடைக்காரர் புன் சிரிப்புடன் கிரஷ் வாங்கிக்கொடுப்பார். கிரஷ் சாப்பிட்ட இன்ஸ்பெக்டர் ஷாப் புத்தகத்தை எடு என்பார்; கையெழுத்து போட்டு விட்டு கடையில் “தீ” வாளி இருக்க வேண்டும், கடை ஏன் வெள்ளை அடிக்கவில்லை, கதவுகளுக்கு பெயிண்ட் ஏன் அடிக்கவில்லை என்றெல்லாம் கேட்பாரே தவிர, தொழிலாளர்களைப்பற்றி துளியும் கேட்பதில்லை.

கடை முதலாளிகள் தினமும் 12 மணிநேர வேலை, தெரிந்தும் மறைமுகமாகவும் வாங்கிக்கொண்டு ஷாப் புத்தகத்தில் 8 மணிநேர வேலை வாங்குகிறேன் என்று எழுதி விடுகின்றார்கள். சம்பள விஷயத்திலும் இம்மாதிரி திருத்துகிறார்கள். தொழிலாளர்களுக்கு போதிய அளவு சம்பளம் கொடுப்பதில்லை. ½ சம்பளம் கொடுத்துவிட்டு முழுச்சம்பளம் வாங்கிக்கொண்டதாக கட்டாயப்படுத்தி கையெழுத்து வாங்கிக் கொள்கிறார்கள். சம்பளம் போதவில்லை என்றாலோ “போ வெளியே” என்கிறார்கள் எனவே சர்க்கார் இதற்கு ஆவன செய்ய வேண்டுகிறேன். தஞ்சையிலுள்ள ஆபீஸர்களை உடனடியாக மாற்றி திறமையான ஆபீஸர்களைக் கொண்டு ஷாப் சட்டத்தை நிலைநிறுத்த வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

இங்ஙனம்
**எ. ஆபக்ர்**

# இங்கும்-அங்கும்

## தையுவான்

வடமேற்கு சீனவிலுள்ளது ஷான்சி மாகாணம். அதன் தலைநகர் தையுவான். இதை 38 ஆண்டுகளாக என்சி-ஷான் என்ற ஈவிரக்கமற்ற நிலப்பிரபு கொடுங்கோலாட்சி புரிந்து, பிற்போக்குக் கோட்டையாக்கியிருந்தான். இதை விடுதலை செய்வதற்கு, ஆயிரக்கணக்கான மக்கள் விடுதலைப்படை வீரர்கள் உயிர் அர்ப்பணிக்கப்பட்டன.

இன்று தையுவானில் சமாதானம் நிலவுகிறது. அங்குள்ள விவசாயிகளுக்கு சரித்திரத்திலேயே முதன்முதலாக நிலம் சொந்தமாக்கப்பட்டு, ஆனந்தமாக உழுது பயிரிடுகின்றனர். காலைக் கதிரவனின் பொன்னொளியில் அந்தப் பள்ளத்தாக்கில் உள்ள கிராமங்களெல்லாம் புத்துயிர்பெற்றுப் பிரகாசிக்கின்றன. குறுகிய மலைச்சரிவுகளின் ஒற்றையடிப்பாதை நெடுக, கோவேறு கழுதைகள், ஒட்டைகள், சிறு மங்கோலியக் குதிரைகளின்மீது தானியமும், உப்பும், நிலக்கரியும் மூட்டை மூட்டையாகக் கொண்டுவருவது ஒரு அற்புதக் காட்சி.

சின்னாபின்னமாக்கப்பட்ட தையுவான், இன்று ஒரு தொழில் நகரமாக கலைத்தும்பியதாகக் காட்சியளிக்கிறது. அழகழகான கட்டிடங்கள், தொழிற்சாலைகள், அற்புதமான ரோடுகள் எங்கும் காணலாம். 4 லட்சம் மக்கள் வாழும் அந்த நகரில், 60 ஆயிரம் பேர் சர்க்கார் தொழிற்சாலைகளில் வேலை செய்கிறார்கள். 20 ஆயிரம்பேர் இதர தொழிற்சாலைகளில் வேலை செய்கிறார்கள். 13 ஆயிரம் பேர் தொழிற்சாலைகளிலும், வயல்களிலும் அற்புதமான வேலை செய்ததற்காக பரிசு பெற்றிருக்கிறார்கள். தொழில் வீரன் என்ற பட்டம் பலருக்கு வழங்கப்பட்டுள்ளது. அதில் ஒருவர் கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்த தோழர் லீஷன்-டா. விவசாய உற்பத்தியைப் பெருக்கும் தேசபக்த இயக்கத்தை ஆரம்பித்து வைத்தவர் இவர்.

யூனிவர்சிடியில் 2000 மாணவர்கள் படிக்கின்றனர். இவர்களில் பெரும்பாலோர் தொழிலாளர், விவசாயிகளின் புதல்வர்கள். நகர முழுவதும் நாடகசாலைகளில் கலை பொங்கிவழிகிறது.

ஆனால் இங்கோ, விவசாயிகளை நிலத்தைவிட்டு அப்புறப்படுத்துகிறார்கள்; குடியிருப்பு மனைகளிலிருந்து துரத்தப்படுகிறார்கள்; வாழ்க்கைக்குப் போதிய கூலி, இன்றி, வாங்க சக்தியற்று யற்று வாடிக்கிடக்கின்றனர் அவர்கள். இவர்கள் குழந்தைகள், தையுவான் விவசாயிகள் குழந்தைகள் கல்லூரிகளில் படிப்பது மாதிரி படிப்பது மாதிரி படிப்பது எங்கே? நாடகக் கலையை ரசிப்பது எங்கே?

விவசாய சீர்திருத்தம் நடைமுறைக்குக் கொண்டு வரப்பட்டுள்ளது அங்கு. இங்கோ, இன்றும் நிலப்பிரபுத்வ சமுதாய அமைப்புத்தானே!

## கணக்கன்பட்டி பிர்க்கா விவசாயிகள் மகாநாடு

கணக்கன்பட்டி, ஜூன் 10—

கணக்கன்பட்டி பிர்க்கா விவசாயிகள் மகாநாட்டு வரவேற்பு கமிட்டி 7-6-52ந் தேதி கூடி 24-6-52ந் தேதியில். கணக்கன்பட்டியில் மகாநாட்டை நடத்துவதென்றும், மகாநாட்டிற்கு திருச்சி தோழர் எம். கல்யாணசுந்தரம், எம். எல். ஏ., மணலி சி. கந்தசாமி எம். எல். ஏ., வி. மதனகோபால் எம். எல். ஏ., பழனி எம். பி., மங்கள கவுண்டர் எம். எல். ஏ., தாராபுரம் சேனபதிக் கவுண்டர் எம். எல். ஏ., திருச்சி தோழியர் பாப்பா முதலியவர்களை அழைப்பதென்று முடிவு செய்யப்பட்டது.

## இந்திய சர்க்காரின் கல்வி நிலை

புது டில்லி, ஜூன், 13—

பார்லிமெண்டில் கல்வி மான்யம் பற்றி விவாதிக்கும்போது, தோழர் திருஞ் பிஹாரி சௌத்ரி (மே வங்கம்) பேசுகையில், பிரிட்டிஷார் காலத்தைவிட இப்பொழுது நேரு சர்க்கார், கல்வியின்மையைப் போக்க அக்கறை எடுத்துக்கொள்ளவில்லையென்றார். 5 வருடத் திட்டத்தில் 123 கோடி ரூபாய், அதாவது தலைக்கு 5 வருடத்துக்கு 4 ரூபாய் கல்விக்கு ஒதுக்கப்பட்டுள்ளதென எடுத்துக் காட்டினார். கல்வி தராத சர்க்காருடன் மக்கள் எப்படி ஒத்துழைக்க முடியும்? எனக் கேட்டார். செக்கோஸ்லாவியாவுக்கு உயர்தரப் படிப்புக்கு மாணவர்கள் அனுப்பப்பட வேண்டுமென்றார்

டாக்டர் மேக்நாத் சாஹா (மே வங்கம்) பேசுகையில் சர்வகலா சங்கக் கல்வியில் இன்னும் அக்கறை காட்டப்படவேண்டுமென்றார் மத்ய பட்ஜெட்டில் 10 சத விகிதம் கல்விக்கு செலவழிக்கப்பட வேண்டுமென்ற கெர் கமிஷன்படி, அதாவது 40 கோடி செலவழிக்கப்பட வேண்டும். ஆனால் சர்க்கார் செலவழிப்பது 4 கோடி 80 லட்சம் ரூபாய்தான் சர்வகலா சங்க மான்ய கமிஷனுக்கு 4 கோடிக்குப் பதில் 35 லட்சம் ரூபாய் தான் ஒதுக்கப்பட்டுள்ளது என எடுத்துக்காட்டினார்.

## சுற்றும், முற்றும்

சென்னை ராஜ்ஜியத்தில் சில பகுதிகளில் குறிப்பாக திருநெல்வேலி, நெல்லூர் ஜில்லாக்களிலும் கஞ்சத்திலிருந்து விசாக பட்டணம்வரை உள்ள கடற்கரை ஓரப் பிரதேசங்களிலும் அணுசக்தி உற்பத்திக்கு தேவையான யுரேனியம், தோரியம் ஆகிய மூலப் பொருள்கள் உள்ளன என்று அணுசக்திக் கமிஷன் பூர்வாங்க ஆராய்ச்சியில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளதாகத் தெரிகிறது.

●

சைகோனுக்கு 28 மைல்களுக்கு வடகிழக்கில் வியத்நாம் மக்கள் சர்க்கார் துருப்புகள் பிரஞ்சுகாரர்களின் 5 சப்ளை ரயில் வண்டிகளை தடுத்து நிறுத்தி, தளவாடங்களைக் கைப்பற்றியதுடன் 50 பேர்களை கைதிகளாகப் பிடித்தனர்.

●

கடந்த 4 ஆண்டு காலத்தில் 30 கோடி ரூபாய் பெறுமான அந்நிய மூலதனம் இந்தியாவில் இறக்குமதி செய்யப்பட்டுள்ளது என்று வர்த்தக மந்திரி இன்று மக்கள் சபையில் அறிவித்தார். கடன் என்றும் உதவி என்றும் அமெரிக்கா இந்தியாவில் போட்டுள்ள கோடிக்கணக்கான டாலர் பெறுமான மூலதனம் இத்துடன் சேர்க்கப்படவில்லை.

## தெ. இ. ர. தொ. சங்க மத்திய சங்கக் கூட்ட அறிவிப்பு

பொன்மலை. ஜூன் 5—

தென்னிந்திய ரயில்வே தொழிற்சங்கத்தின் மத்திய சங்கம் தன்னுடைய சகல கிளைகளுக்கும் ஒரு சுற்றறிக்கை அனுப்பியுள்ளது. அதில் ஜூன் 21, 22 தேதிகளில் மாயவரத்தில் மத்திய சங்கக் கூட்டம் நடைபெறும் என்றும், அக் கூட்டத்தை வெற்றிகரமாக நடைபெறச் செய்ய கிளைச் சங்கங்களின் செயலாளர் தங்கள் கிளையின் அங்கத்தினர் எண்ணிக்கை தொழிலாளர் எண்ணிக்கை, வரவு, செலவு மற்றும் பல விபரங்களையும் கொடுக்கும் படியாக அறிவித்துள்ளது.

மேலும் மாயவரம் மத்திய சங்கக் கூட்டத்திற்கு வரும் பிரதிநிதிகள், பிரதிநிதிக் கட்டணத்துடன் சாப்பாட்டுக்கு ரூபாய் 2 கட்டணம் செலுத்த வேண்டுமென்றும் அறிவித்துள்ளார்.

மத்திய சங்கக் கூட்டத்தை அடுத்து 22-6-52ல் மாலை 6-30 மணிக்கு மாபெரும் பொதுக்கூட்டம் நடைபெறும். தோழர்கள் எம். கல்யாணசுந்தரம் எல்.எல்.ஏ கே. ஏ. நம்பியார், எம்.பி., எஸ். ராமலிங்கம் எம். எல். ஏ., மணலி கந்தசாமி எம்.எல்.ஏ., என். சிவராஜ் எம். எல். ஏ. முதலியோர் சொற்பொழிவாற்றுவர்.

# சேலம் ஜில்லா பிர்க்கா அபிவிருத்தி இலாகாவின் லக்ஷணம்

சேலம் ஜில்லா ஆத்தூர் தாலுக்காவில், கங்கவல்லி, ஆணையம்பட்டி, நடுவலூர் கிராமங்களுக்கு அருகாமையில் 300 ஏக்கர்கள் விஸ்தீரணமுள்ள தரிசு நிலத்தில் அங்குள்ள தாழ்த்தப்பட்ட மக்கள் பயிர் செய்து வந்தார்கள். அவர்களில் கடந்த 20 வருஷமாக சாகுபடி செய்து வருபவர்களும் உண்டு. இவர்களிடத்தில் நிலவரியும் வசூலிக்கப்பட்டு வந்திருக்கிறது. காடுகளை வெட்டி நிலத்தைத் திருத்தி பண்படுத்துவதற்கு ஏக்கருக்கு ரூ. 100 முதல் ரூ. 200 வரை ஆகியிருக்கும் என்று மதிப்பிடப்படுகிறது. 1951ம் ஆண்டு பிற்பகுதியில் இந்த நிலங்களில் சோளமும் கேழ்வரகும் பயிராகி செழுமையாக கொழு கொழுவென்று வளர்ந்து அறுவடை செய்வதற்கு பதினைந்து நாட்களிருக்கும் பொழுது, சர்க்கார் டிராக்டரைக் கொண்டு வந்து 80 ஏக்கர் நிலத்தில் விட்டடித்து பயிர்களை நாசம் செய்தனர். ஏழை விவசாயிகள் அதைக் கண்டு வயிறெரிந்தனர்; கதறினர். வேண்டாம், பயிர்களை அழிக்காதீர்கள் பதினைந்து நாட்களில் அறுத்து விடுகிறோம்" என்று கெஞ்சினர். ஆனால், கல்நெஞ்சம் படைத்த அதிகாரிகள் "டிராக்டர் செலவை யார் கொடுப்பது, உங்களை யார் இந்த நிலத்தில் பயிர் செய்யச் சொன்னது" என்று மிரட்டி அனுப்பிவிட்டார்கள். அந்த நிலங்களை ஏற்கனவே நிலமுடைய வேறு விவசாயிகளுக்கு பங்கு போட்டு கொடுத்துவிட்டார்கள்.

19-9-51ல் விவசாய மந்திரி அவர்களுக்கும், சேலம் ஜில்லா கலெக்டர் அவர்களுக்கும் விவசாய டிப்டி டைரக்டர் அவர்களுக்கும் மகஜர்கள் சமர்ப்பிக்கப்பட்டன. விவசாய டைரக்டர் மட்டும் "இது அதிகாரம் பெறாத ஆக்கிரமிப்பாதலால் உங்களுக்கு கேட்பதற்கு உரிமை கிடையாது என்று பதில் கொடுத்திருக்கிறார் மந்திரியிடமிருந்தாவது கலெக்டரிடமிருந்தாவது இதுவரை எந்தவிதமான பதிலும் கிடைக்கவில்லை.

யுத்த காலத்தில் உணவு உற்பத்தியை பெருக்குவதற்காக இந்த நிலத்தை பண்படுத்தி பயிர்செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொண்டார். அப்பொழுதிருந்த தாசில்தார் என்பது குறிப்பிடத்தகுந்தது.

சர்க்காரின் இந்த நாச வேலையால் விவசாயிகளுக்கு ஏராளமான நஷ்டம் ஏற்பட்டிருக்கிறது. சாகுபடி செய்வதற்கு ஒரு ஏக்கருக்கு நாலு ஏர் இரட்டை உழவுக் கூலி ரூ. 16, நான்கு வண்டி எருவுக்கு ரூ. 20, களைவெட்ட 12 பெண்களுக்கு கூலி 36 படி தானியம் அல்லது ரூ. 12 விதைத் தானியம் நாலுபடிக்கு ரூ. 41-5-4 இன்னும் பதினைந்து நாட்கள் பொறுத்து அறுவடை செய்தால் கிடைத்திருக்கக்கூடிய தானியம் 592 கலம். ஒரு கலம் ரூ. 30 என்று வைத்துக்கொண்டாலும் ரூ. 17760 நஷ்டம்.

ஏன் ஏழை விவசாயிகளுக்கு இந்த அநியாயம் செய்தார்கள்? இந்த கிராமங்களில் பிர்க்கா அபிவிருத்திதிட்டம் அமுலில் இருக்கிறதாம். அதன்படி தரிசு நிலங்களை விவசாயிகளுக்குக் கொடுக்க வேண்டுமாம்; ஒவ்வொருவருக்கும் நிலத்தைப் பண்படுத்த ரூ. 120 கடன்கொடுக்கவேண்டுமாம்; இந்த விதத்தில் விவசாயத்தை அபிவிருத்தி செய்கிறார்களாம். அதற்காக அங்கு பண்படுத்தப்படாத தரிசு நிலங்கள் இருநூறு முந்நூறு ஏக்கர்கள் இருக்கும் பொழுது அவைகளை எல்லாம் விட்டுவிட்டு ஏற்கனவே பண்படுத்தப்பட்ட இந்த நிலங்களை பிடிக்கிறார்கள். தரிசாகக் கிடந்த நிலங்களைப் புதிதாக பண்படுத்தினது போலவும் அதற்கு ஏக்கருக்கு ரூ. 120 செலவு என்றும் கணக்கு காட்டுகிறார்கள்.

நிலங்களை விவசாயிகளுக்குக் கொடுக்கவேண்டும் என்பது திட்டம். அப்படியானால் ஏற்கனவே இந்த நிலங்களில் விவசாயம் செய்து வந்தவர்களுக்கே ஏன் கொடுக்கக்கூடாது? இவர்களெல்லாம் நிலமில்லாத விவசாயிகள் இவர்களுக்கு எப்படி ரூ. 120 கடன் கொடுப்பது? பணம் திரும்பக் கொடுக்கப்படா விட்டால் அதை எப்படி வசூல் செய்வது? ஆதலால் இவர்களுக்கு நிலத்தைக் கொடுக்கக் கூடாது என்று முடிவுசெய்து, ஏற்கனவே நிலமுடைய விவசாயிகளிலே குறைந்தபட்சம் ரூ. 9 நிலவரி செலுத்துவோர்களைத் தேடிப் பிடித்து அவர்களுக்கு ஆளுக்கு 3 ஏக்கர் வீதம் கொடுத்திருக்கிறார்கள். "உள்ளவனெவனுக்கும் கொடுக்கப்படும், இல்லாதவனிடத்திலிருந்து உள்ளதும் எடுத்துக் கொள்ளப்படும்" என்ற வேதவாக்கை அப்படியே நிறைவேற்றுகிறார்கள். இதில் என்ன தவறு இருக்க முடியும்?

அதுமட்டுமல்ல, தலைக்கு ரூ. 120 கடன் கொடுத்ததாக கணக்கு; கடன் பத்திரத்திலும் ரூ. 120 என்று தெளிவாக எழுதியிருக்கிறது. ஆனால் ஒவ்வொருவருக்கும் ரூ. 64 தான் கையில் கிடைத்தது என்று விவசாயிகள் சொல்லுகிறார்கள். மீதம் ரூ. 56 செலவு. செலவுகள் என்னென்ன என்பதை பிர்க்கா அபிவிருத்தி இலாகா அதிகாரிகளைத் தான் கேட்க வேண்டும்.

பிர்க்கா அபிவிருத்தி இலாகாவின் வேலை எப்படி?

—பிர்க்கா அபிவிருத்தியின் பெயரால் மக்கள் துன்புறுத்தப்படுவது நிறுத்தப்பட வேண்டும்.

—ஏழை விவசாயிகளுக்கு அவர்கள் பயிர் செய்து வந்த நிலங்களை திருப்பிக் கொடு.

—நாசம் செய்த பயிர்களுக்கு நஷ்டஈடு கொடு.

பெண்:—ஆமா, நம்ம சர்க்காரை நடுவு நிலைமை சர்க்காரென்றுசொல்லிண்டிருக்கோமே; அப்படின்னா, 43 சதவிகிதம் பிரிட்டன், அமெரிக்காவுடன் வியாபாரம் நடத்திறதும், ரஷியாவுடன் 1 சதவிகிதமட்டும் வியாபாரம் நடத்தினா, இது நடுவு நிலைமை என்று மத்தவாள் ஏத்துக் கொள்வாளா?

ஆண்:—அடி மண்டே, இது நோக்குத் தெரியலியோ? நம்மவாளிட்டே சுதந்திரமின்னு கொடுத்தாளே, அப்பவே நம்ம வெளிநாட்டு வியாபாரம் அவாளோடேதான், எவாளோடே, நடத்தனுமின்னு நிபந்தனை விதிச்சிருக்கோ அந்தக் கோட்டைத் தாண்டி நடக்காமலிருப்பது தாண்டி நடுவு நிலைமை! புரிஞ்சுதோ?

## தமிழ் வளர்ச்சிக் கழகம்

மேற்படி கழக சார்பில் நடத்தப்படும் 5-வது தமிழ்விழா இவ்வாண்டு சென்னையில் ஜூலை 27, 27 தேதிகளில் நடத்துவது என தீர்மானிக்கப்பட்டிருப்பதாக ரா. கிருஷ்ணமூர்த்தி (கல்கி), ம. ப. பெரியசாமிதூரன் அறிவிக்கின்றனர்.

## டாலர் நாகரிகமே!

## அணுகுண்டு பீதி

அமெரிக்க பள்ளிக்கூடங்களில் படிக்கும் சிறுவர், சிறுமியரையும் அணுகுண்டு பயம் பிடித்துவிட்டது. பிள்ளைக்கு உடற்பயிற்சி விளையாட்டில் ஒன்று "அணுகுண்டு கவாத்து". அணுகுண்டு யுத்த பீதி, இனவெறி, பயங்கரப் பிரச்சாரம், மதவெறி வர்ணத்துவேஷம், பண தேவதைக்கு பாதபூஜை ஆகிய கொடிய அம்சங்களெல்லாம் குழந்தை உள்ளங்களை ஒடித்து, உடலை சிதைத்து விடுகின்றன.

85 சத விகித குழந்தைகளுக்கு முறையான கல்வி கொடுக்கப்படுவதில்லை. கல்விக்கு செலவழிப்பதைவிட, சூதாடும் மண்டபங்களுக்கு அதிகமாக செலவழிக்கப்படுகிறது. கல்விக்குப் போதிய கட்டிட வசதி கிடையாது. அதனால் வருடம் 1-க்கு 3,70,000 குழந்தைகளுக்கு விபத்து ஏற்படுகிறது. ஒரேஒரு அறையுடைய 70 ஆயிரம் கிராமப் பள்ளிகள் ஒவ்வொன்றிலும் அந்த ஒரே அறையில் 50-க்கு மேற்பட்ட குழந்தைகள் அடைக்கப்படுகின்றனர்.

11 ஆயிரம் குழந்தைகளில் 18 சத விகிதத்தினருக்கு, வருடத்திற்கு 12 மாதம் என்று சொல்லத் தெரியவில்லை. பள்ளி ஆசிரியர்களுக்கு, சரியான போதனா கல்வியும் கிடையாது, போதிய சம்பளமும் கிடையாது. மாதத்துக்கு 40 டாலர்தான் சம்பளம். $12\frac{1}{2}$ லட்சம் குழந்தைகள் வருடா வருடம் பள்ளியைவிட்டு விலகி விடுகின்றனர் என்று சர்க்கார் அறிக்கையே கூறுகிறது. 25 லட்சத்துக்கு மேற்பட்ட குழந்தைகள் வறுமையால் தொழிற்சாலைகளிலும், விவசாயத்திலும் ஈடுபடும்படியான நிர்ப்பந்தம் ஏற்பட்டுள்ளது. 14 முதல் 16 வயது சிறுவர், சிறுமியர், வாரத்துக்கு 60—70 மணி நேர வேலை பார்க்க நிர்ப்பந்திக்கப்படுகின்றனர்.

லட்சக்கணக்கான அமெரிக்க குழந்தைகளுக்கு வீதிகள்தான் பள்ளி! கொலை நவீனங்கள், சினிமாக்கள்தான் அவர்களின் பாடப் புத்தகங்கள், இதனால் குற்றங்களும், விபசாரமும், குடியும்தான் சிறுவர், சிறுமியரிடையே மலிந்து விட்டது. தினம் ஒன்றுக்கு இத்தகைய குற்றங்கள் 1950ல் 5,000, இளஞ் சிறுவர், சிறுமிகளால் செய்யப்பட்டன. ஒவ்வொரு வருடமும் 50 ஆயிரம் முதல் 1 லட்சம் குழந்தைகள் சிறைக்கு அனுப்பப்படுகின்றனர். ஒரு கோடி குழந்தைகளுக்கு கண் கோளாறு; 30 லட்சம் குழந்தைகளுக்கு காது நோவு 5 லட்சம் குழந்தைகள் எலும்பு சம்பந்தமான வியாதிகளால் பீடிக்கப்பட்டுள்ளனர்.

டாலர் பூதங்களின் வாழ்க்கை முறையால் இவ்வாறு அமெரிக்க குழந்தைகளின் வாழ்வு பாழாகலாமா?

## சம்பளம் கொடுக்காததால் வேலை நிறுத்தம்

மாதவரம், ஜூன். 12—

மாதவரம் சில்க் மில்லில் சுமார் 50 தொழிலாளர்களுக்கு மேமாத சம்பளம் கொடுக்காததால் தொழிலாளர்கள் பன்முறை நிர்வாகத்தை தனித்தனியாக கேட்டும் பயனளிக்காததால் தொழிலாளர்கள் அனைவரும் ஒன்று கூடி ஒர்க்ஸ் கமிட்டி அமைத்து அதன் மூலமே ஒற்றுமையால்தான பரிகாரம் காண முடியும் என்று 11-6-52 புதன் கிழமையன்று வேலை நிறுத்தம் செய்யப்போவதாக நிர்வாகத்திற்கு அறிவித்தனர். தொழிலாளர் ஒற்றுமையைக் கண்டு வேறு வழியில்லாமல் மில் நிர்வாகம் பணிந்து வந்தது. 11-6-52 புதன் அன்றே சம்பளத்தில் $\frac{1}{4}$ பாகம் தருவதாகவும், பாக்கி சம்பளத்தை 12-6-52 யன்று கொடுப்பதாகவும் ஒப்புக் கொண்டது.

Edited, Printed & Published by G. Alavandar, at Janasakthi Press, Subodaya Buildings, 83, Mount Rd, Madras 6 REGD. NO. M. 5934